Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**பார்வை**

நமது திட்டத்தின் முழு உருவையும் முழுப் பொருளையும் தெரிந்து கொள்ளாதவர்கள் தத்தமது பார்வைக்குட்பட்ட பகுதி மட்டுமே நமது திட்டம் என்று கருதிக் கொண்டு பேசுவர்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வாழ்க்கை**

வாழ்க்கை அவனவன் வாழ்வதற்கு என்றுமட்டும் கருதக் கூடாது. மற்றவர்கள் நலனுக்கும் என்றும் கருத வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 21 - 2 - 83 திங்கள் வெளியீடு 22 - 2 - 83 செவ்வாய் இதழ்: 124

★ காமராஜரை காங்கிரசில் எதிர்த்தவர் கோசல்ராம்
★ காமராஜர் தலைவர் என்றதை கண்டித்தவர் கருணாநிதி
★ காமராஜர் எதிர்ப்பில் தோன்றியது இ. காங்கிரஸ்
★ பல்கலை கழகத்துக்கு காமராஜர் பெயர் வைத்தது புரட்சித்தலைவர்
★ கடற்கரைசாலைக்கு காமராஜர் பெயர்சூட்டியதும் அவரே

## காமராஜர் புகழை மறைக்க முயன்றது யார்?

## இ. காங்கிரஸ் - தி. மு. க. மீது

# செல்வி ஜெயலலிதா குற்றச்சாட்டு



### அவதூறு பிரச்சாரத்துக்கு கண்டனம்

**தூத்துக்குடி, பிப் 21- காமராஜர் புகழை மறைக்க முயற்சித்தது இ காங்கிரசாரும், தி.மு.க.வினரும் தான் என்று செல்வி ஜெயலலிதா ஆதாரங்களுடன் குற்றம் சாட்டினார். காமராஜர் புகழ் நிலைக்க புரட்சித்தலைவர் எடுத்த நடவடிக்கைகளையும் அவர் சுட்டிக்காட்டினார்.**

திருச்செந்தூர் தொகுதியில்கழககொள்கைபரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா நேற்று தேர்தல் பிரச்சாரத்தை தொடங்கினார்.

அதற்காக நேற்று காலை சென்னையில் இருந்து விமானம் மூலம் மதுரைபோனார். மதுரையில் அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. பின்னர் மதுரையில் இருந்து காரில் தூத்துக்குடி வழியாக திருச்செந்தூர் போய்ச் சேர்ந்தார். திருச்செந்தூர் தொகுதியில் முதலில் குலசேகரப் பட்டினத்தில் நடந்த கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டத்திலும் அடுத்து 3 கூட்டங்களிலும் அவர் கலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:

நான் எதற்காக வந்திருக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியும். வருகிற மார்ச் மாதம் 1-ந் தேதி திருச்செந்தூர் சட்டமன்ற தொகுதிக்கு நடைபெறும் தேர்தலில் நீங்கள் அனைவரும் கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து இரட்டை இலை சின்னத்தில் உங்கள் வாக்குகளை அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வந்திருக்கிறேன்.

### வேறுபாடுகள் இருக்கின்றன

நான் இங்கு வரும் முன்னே நம்மைஎதிர்த்துப் போட்டியிடும் மாற்றுக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பேசிய பேச்சுக்களைப் பற்றி கேள்விப்பட்டேன். ''பெருந்தலைவர் காமராஜர் இலவச உணவு திட்டத்தைக் கொண்டு வந்தார். அவர் புகழை மறைக்க புரட்சித் தலைவரும் கழக அரசும் முயற்சி செய்கிறது'' என்று இ. காங்கிரசை சேர்ந்த பெரியவர் கே. டி. கோசல்ராமும் தி. மு. க. வைச் சேர்ந்தவர்களும் பேசியதாகக் கேள்விப்பட்டேன்.

காமராஜர் இலவச மதியஉணவு திட்டத்தைக் கொண்டு வந்தார், புரட்சித்தலைவர் அதை மறுக்கவில்லை, அந்த திட்டத்துக்கும், புரட்சித்தலைவர் கொண்டுவந்துள்ள சத்துணவு திட்டத்துக்கும் சில வேறுபாடுகள் இருக்கின்றன என்பதைத்தான் கூறி இருக்கிறார்,

### காமராஜரை எதிர்த்த கோசல்ராம்

காமராஜர் கொண்டு வந்த இலவச உணவு திட்டத்தில் பள்ளிக்கூட மாணவர்களுக்கு இலவசமாக ஒரு வேளை உணவு வழங்கப்பட்டது. ஆனால் புரட்சித் தலைவர் கொண்டு வந்துள்ள சத்துணவுதிட்டத்தில் 2 வயதுலிருந்து 10 வயதுக்குட்பட்ட 67 லட்சம் ஏழைக் குழந்தைகளுக்கு 365 நாட்களும் சத்துணவு வழங்கப்படுகிறது, அந்த திட்டத்துக்கும் இந்த திட்டத்துக்கும் உள்ள வேறுபாடுகள் இவை தான் என்று கூறுகிறார்.

காமராஜர் புகழை மறைக்க முயற்சி செய்தவர் யார்? அவர் வாழ்ந்த காலத்தில் அவருக்கு எதிராக செயல் பட்டவர் யார் என்பதை ஒரு நிமிடம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். காமராஜர் இருந்த போது காங்கிரஸ் கட்சிகுள்ளேயே அவருக்கு எதிராக போராட்டம் நடத்தியவர் கே. டி. கோசல்ராம். அவர் நமது தந்தையைப் போன்றவர். சுதந்திரப் போராட்டவீரர். தியாகி அவரை நிச்சயமாக நாம் மதிக்கிறோம்.

அவர் நம்மைப்பார்த்து நாம் பெருந்தலைவர்காமராஜர் புகழை மறைக்கப் பார்க்கிறோமென்று கூறி இருக்கிறார். பொதுமக்களாகிய நீங்கள் தான் இதை நியாயமா, இல்லையா என்று சொல்ல வேண்டும்.

பெருந் தலைவர் காமராஜர் வாழ்ந்த காலத்தில் அவருக்கு எதிராக போராட்டத்தைத் தூண்டியவர்கள் தான் இன்று அவரது புகழை மறைக்க கழகம் முயலுகிறதுஎனக் கூறுகிறார்கள்.

### இந்திரா காங்கிரஸ் என்பதென்ன?

இந்திரா காங்கிரஸ் என்பது என்ன? காமராஜருக்கு எதிராக தோற்றுவிக்கப்பட்ட கட்சிதானே இது? காமராஜர் வாழ்ந்தகாலத்தில் காங்கிரஸ் கட்சி ஒன்றாக இருந்தபோது ஜனாதிபதி தேர்தலில், காமராஜர் சஞ்சீவ ரெட்டியையும், இந்திரா காந்தி வி.வி. கிரியையும் நிறுத்தினார்கள். இதனால் தான் கட்சி உடைந்தது. இ. காங்கிரஸ் பிரிந்தது. இதுதானே வரலாறு?

அந்த இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள், நாம் காமராஜர் புகழை மறைக்கப் பார்க்கிறோம் என்று பேசலாமா? ''அண்ணா என் வழிகாட்டி, காமராஜர் என் தலைவர்'' என்று சொன்னார் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவரைப் பார்த்து இப்படிச் சொன்னால் இது என்ன நியாயம்? என அன்றைக்கு எரிசரம் தொடுத்தவர் கருணாநிதி அப்படிப் பட்டவர்கள் தான் "கழகத்தைச் சேர்ந்தவர்களும், புரட்சித் தலைவரும் காமராஜர் புகழை மறைக்கப் பார்க்கிறார்கள்" எனக்கூறுகிறார்கள் கருணாநிதி இப்போது உடல் நலம் இல்லாமல் இருக்கிறார். தேர்தல் பிரச்சாரத்துக்குக் கூட வரமுடியாத சூழ்நிலையில் இருக்கிறார். இந்த நிலையில் அவரைப் பற்றி விமர்சிப்பது அரசியல் நாகரீகமாகாது. அவர் குணம் அடைய வேண்டும் என்று விரும்புகிறேன்,

### கருணாநிதிக்கு சிகிச்சை: முதல்வர் விருப்பம்

கருணாநிதிக்கு எதிர்க்கட்சித தலைவர் என்ற முறையில் அரசு செலவில் சிகிச்சை அளிக்க முதல்வர் புரட்சித்தலைவர் விரும்பினார்.

வெளி நாட்டில் இருந்து கூட தேவைப் பட்டால் மருந்து வாங்கி வரவும் விரும்பினார். ஆனால் கருணாநிதிக்கு என்ன வியாதி என்றுகூட சொல்லமாட்டேன் என்கிறார்கள்.

எப்படியோ கருணாநிதி விரைவில் குணம்அடைய விரும்புகிறோம்.

புரட்சித் தலைவர் காமராஜர் புகழை மறைக்கப் பார்க்கிறார் என்று குற்றம் சாட்டுபவர்கள யார் யார்? என்பதை அடை

(2-ம பக்கம் பார்க்க)

## அரிசி தர டெல்லி சம்மதம்

# புரட்சித்தலைவர் கோரிக்கை வெற்றி

**சென்னை. பிப் 21- புரட்சித்தலைவர் கோரிக்கையை ஏற்று தமிழகத்துக்குஅரிசி தர மத்திய அரசு முன்வந்துள்ளது இதை புரட்சித்தலைவர் நிருபர்களிடம் கூறினார்.**

ஆரணி ஒன்றியம், மற்றும் ஆரணி தொகுதி சென்னை எருக்கஞ்சேரி சூளை மற்றும் சைதாப்பேட்டையைச் சேர்ந்த 2400 பேர் பல்வேறு கட்சிகளிலிருந்து விலகி இன்று புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில்இணைந்தனர். முதல்வர்புரட்சித்தலைவர் நிருபர்களின் கேள்விகளுக்குப் பதிலளித்துக் கூறியதாவது:—

கேள்வி:- கிருஷ்ணா நதி நீர் பற்றி ஆந்திராவுடன் எப்போது பேசுவீர்கள்?

முதல்வர்: திருச்செந்தூர் தேர்தலுக்குப்பின் நடைபெறும் அதிகாரிகள் மட்டத்திலா அல்லது அமைச்சர்கள் மட்டத்திலா என்பது அந்த அரசுடன் கலந்து பேசி முடிவு செய்யப்படும்.

கேள்வி: இந்திதிணிப்பு இல்லை. டி. வி யில் போதிய அலைவரிசை (சானல்) இல்லாததால் தான் பிராந்திய மொழிகளுக்கு முக்கியத்துவம் தரமுடியவில்லை என்று பிரதமர் கூறியிருக்கிறாரே?

முதல்வர்:— வரவேற்கிறேன். விரைவில் இன்னொரு சானல்வரும் என்பது இந்தப் பேச்சிலிருந்து தெரிகிறது

கேள்வி:- திருச்செந்தூரில் மைய அமைச்சர் ஆர். வி. பேசும் போது 1967-க்கு பின் 15 ஆண்டுகள் மாநில கட்சியின் ஆட்சியால் தமிழக வளர்ச்சி பாதிக்கப்பட்டுள்ளது. இன்னும் சில ஆண்டுகளில் தேசிய கட்சி ஆட்சி ஏற்படவில்லை என்றால் தமிழகம் பின் தங்கிவிடும் என்று பேசியிருக்கிறாரே?

முதல்வர்:- வாஸ்தவம் தான் மாநிலக்கட்சிகளை நீக்கிவிட்டு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் போன்ற தேசியக் கட்சி ஆட்சியே இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பேசியிருப்பார் என்று எண்ணுகிறேன்.

### அவரவர் கடமை

கேள்வி: முதல்வருடன் ஆளுநர் குரானா டெல்லி சென்றது சட்டப்படி முறையல்ல என்று மனோகரன் கூறியிருக்கிறாரே?

முதல்வர்: நான் அவரை அழைத்துப் போவதோ அவர்என்னை அழைத்துப் போவதோ பிரச்சினை அல்ல. அவர், அவர்கடமையை செய்ய சென்றார். நான் என் கடமையை செய்யச் சென்றேன்.

இதிலிருந்து எதிர்க் கட்சிக்காரர்களுக்கு பேசுவதற்கு வேறு பிரச்சினை எதுவும் இல்லை என்பதை அவர்கள் பேச்சு தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

கேள்வி: அடுத்தமாதம் தென் மாநில முதல்வர்கள் கூட்டத்தைஹெக்டே கூட்ட இருப்பதாகவும இது குறித்து மற்ற தென் மாநில முதல்வர்களுக்கு கடிதம் எழுதவிருப்பதாகவும் கூறியுள்ளாரே?

முதல்வர்:- எனக்குத் தகவல் வரவில்லை. தென் மண்டல கவுன்சில் கூட்டம் கடந்த ஆண்டு நடந்தபோது அதற்கு தலைமை தாங்கும பொறுப்பு தமிழகத்திற்கு ஏற்பட்டது. இந்தமுறை ஆந்திரத்திற்கோ கர்நாடகத்திற்கோ கூட

(8-ம் பத்தி பார்க்க)

(4-ம் பத்தி தொடர்ச்சி)

கிடைக்கலாம். இப்போது அவர் கூறியுள்ள இதே பிரச்னைகள்பற்றி அதிலும் பேசலாம் எந்த நிலையில் பேச்சு நடைபெறுகிறது என்பதைப் பொறுத்தும், என்ன முடிவு என்பதைப் பொறுத்தும் கூட்ட நோக்கம் இருக்கும். அதற்கு முன் கற்பனையாக ஒரு கருத்தைக் கூறுவது சரியல்ல.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பதில் அளித்தார்.

முதல்வர், நிருபர்களின் கேள்விகளுக்குப் பதிலளித்துக் கொண்டிருக்கையில் தமிழகத்திற்கு எவ்வளவு அரிசி அனுப்புகிறோம் என்ற தகவலை28 ந்தேதி சொல்லுகிறோம் என்ற தகவல் மத்திய அரசிடமிருந்து வந்தது முதல்வர் இதை நிருபர்களுக்குத் தெரிவித்தார்.

# கழகத்தில் இணைந்த 2400 பேர்

**சென்னை, பிப் 21- பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த 2400 பேர் இன்று புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.**

சென்னை சைதாப்பேட்டை, எருக்கஞ்சேரி, சூளைமேடு மற்றும் ஆரணி ஒன்றியத்தைச் சேர்ந்த2400 பேர்பல்வேறு கட்சிகளிலிருந்து விலகி இன்று முதல்வர் புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

ஆரணி தொகுதிஆரணி ஒன்றியம் நெசல் முன்னாள் ஊராட்சி மன்றத் தலைவரும், திமுக பொருளாளருமான ஆர். துரைசாமி தலைமையில், என். வெங்கடேசன் (ஆரணி ஒன்றிய திமுக துணைச் செயலாளர்) டி கார்த்திகேயன் (புதுப்பட்டுகிளை திமுக செயலாளர்) சிவலிங்கம் (புதுப்பட்டு கிளைதிமுக பொருளாளர்) தனசேகரன் (புதுப்பட்டு கிளை வட்ட பிரதிநிதி) ஆகியோர் உட்பட 230 பேரும், ஆரணி ஒன்றியம் இராந்தம் கொரட்டூர் கிளையைச் சேர்ந்த 25 பேரும்மற்றும் மேற்கு ஆரணி ஒன்றியம் சம்புவராயநல்லூர் கிளையிலிருந்து 50 பேரும் ஆரணி டவுன் 9-வது வட்டததிலிருந்து 78 பேரும் ஆரணிடவுன் 3-வது வட்டத்திலிருந்து 50 பேரும் ஆரணி ஒன்றியம் ஆதனூர் கிளை ஆரணி ஒன்றியம் ஹரிஹரன் நகர்இரும்பேடு கிளை, ஆரணிடவுன் 18—வது வட்டம். மேற்கு ஆரணிஒன்றியம் புங்கம் பாடி கிளை ஆரணி டவுன் 1-வது வட்டம், ஆரணி ஒன்றியம புனலப்பாடி, கருணாகரன்பட்டு, மாமண்டூர், மெய்யூர் விண்ணமங்கலம் மற்றும முள்ளிப்பட்டு, சிறுமூர், பெரிய அய்யம் பாளையம், அம்மா பாளையம், அப்பந்தாங்கல் ஆகிய இடங்களிலிருந்து 1300க்கும் மேற்பட்டவர்கள் பல்வேறு கட்சிகளிலிருந்து விலகி முதல்வர்புரட்சித்தலைவர் முன்னிலையில் இன்று கழகத்தல் இணைந்தனர்.

### சைதாப்பேட்டை

சென்னைசைதாப்பேட்டையைச் சேர்ந்த 100 பேர் இன்று முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

### எருக்கஞ்சேரி-சூளை

எருக்கஞ்சேரி, மற்றும் சூளை பகுதியைச் சேர்ந்த 1000பேர் இன்று முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்

இந்த நிகழ்ச்சியின் போது பொதுச் செயலாளர் ப. உ. ச அமைப்புச் செயலாளர் ராசாங்கம், தலைமை நிலையச்செயலாளர் துரை கோவிந்தராசன், அமைச்சர்கள் பொன்னையன், திருநாவுக்கரசு மற்றும் ரணி சண்முகம் எம் எல்ஏ சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் எம். எல். சி. சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்ற செயலாளர் இ மதுசூதனன், சைதை துரைசாமி, தி நகர் மூர்த்தி திருவை அண்ணாமலை, புலவர் அறிவுடைநம்பி, பெரியவர் சங்கரய்யா ஆகியோர் உடனிருந்தனர்.

# ஜெயலலிதா குற்றச்சாட்டு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

யாளம் காட்டத்தான் இதைக் கூறுகிறேன்.

## தனிப்பெருந் தலைவர்

நாட்டின் முன்னேற்றத்திற்காக ஓயாமல் பாடுபட்டவர், தனிப்பெருந் தலைவர் காமராஜர். அவர் இந்தியாவின் முன்னேற்றத்திற்காக உழைத்தவர். அதனால் இன்று புரட்சித்தலைவர், காமராஜருக்கு புகழைசேர்க்க மதுரையில் காமராஜர் பல்கலைக்கழகம் என்று பெயர் சூட்டினார். சென்னை கடற்கரை சாலைக்கு ''காமராஜர் சாலை'' என்று பெயர் சூட்டினார். காமராஜரின் சகோதரிக்கு ஆயுள் முழுக்க உதவிப்பணம் வழங்க வேண்டும் என்று உத்தரவிட்டார்.

## யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே

புரட்சித்தலைவர் இன்னும் சில நாட்களில் இந்த தொகுதிக்கு வருகிறார். ''யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே'' என்று சொல்வார்கள். அதுபோல் யானையைப் போன்ற எம். ஜி. ஆர். வருவதற்கு முன்னதாகவே மணியோசையாக நான் முன்னே வந்து இருக்கிறேன்.

புரட்சித்தலைவர் இங்கு வந்ததும், படுக்கப்பத்து கிராமத்தில் பெருந்தலைவர் காமராஜரின் சிலையைதிறந்து வைத்துவிட்டுத்தான் இந்த தொகுதியில் தேர்தல் பிரச்சாரம் செய்கிறார்.

அந்தச்சிலை திறப்புவிழாவுக்கு கூட முட்டுக்கட்டை போடசிலருடன் சேர்ந்து கோசல்ராம் முயற்சி செய்து வருகிறாராம். சிலை திறக்கக் கூடாது என்றுதந்திகள் கொடுக்கவும் கோசல்ராம் ஏற்பாடு செய்து வருகிறாராம்.

காங்கிரஸ் தலைவர்களை கேட்கிறேன் இன்று இந்தியாவில் உள்ள மாநிலங்களில் எத்தனை மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி ஆட்சி புரிகிறது? தமிழ்நாட்டில் புரட்சித் தலைவர் காமராஜர் பல்கலைக்கழகம்என்றுபெயர் சூட்டியது போல அந்த மாநிலங்களில் ஒரு பல்கலைக் கழகத்துக்காவது காமராஜர் பெயர் சூட்டி இருக்கிறார்களா?

காங்கிரஸ் ஆட்சி நடத்தும் மாநிலங்களில் எந்த சாலைக்காவது, ஒரு தெருவுக்காவது அவர் பெயர் சூட்டி இருக்கிறார்களா?

எந்தகாங்கிரஸ்மாநிலத்தில் காமராஜர் சகோதரிக்குஉதவிப்பணம்வழங்கி இருக்கிறார்கள்? இல்லையே அந்த எண்ணமும் தமிழ்நாட்டில் புரட்சித் தலைவருக்குத் தானே தோன்றியது?

## காமராஜர் புகழை மறைத்தவர்கள் யார்?

காமராஜருக்கு இத்தனை பெருமைகள் சேர்த்த புரட்சித் தலைவரும் நாமும் அவர் புகழை மறைக்கப் பார்க்கிறோமா? காமராஜர் புகழை மறைத்தவர்கள் யார்? மறைக்கப் பார்க்கிறவர்கள் யார் என்று நீங்கள் தான் சொல்ல வேண்டும். இதை உங்கள் முடிவுக்கே விட்டு விடுகிறேன்.

பொது மக்களில் சிலரை எப்போதும் ஏமாற்றிக் கொண்டு இருக்கலாம். பலரை சில காலம் ஏமாற்றிக் கொண்டு இருக்கலாம். ஆனால் மக்கள் அனை வரையும் எப்போதும் ஏமாற்றிக்கொண்டு இருக்க முடியாது.

தமிழக மக்களின் முன்னேற்றத்திற்காக முதல்வர் புரட்சித்தலைவர் எத்தனையோ திட்டங்களை நிறைவேற்றி வருகிறார்.

சத்துணவுத் திட்டம் மூலம் ஏறத்தாழ 67 லட்சம் குழந்தைகளுக்கு உணவு அளிக்கபபடுகிறது.

இததிட்டம் மூலம் சுமார் 1 லட்சத்து 75 ஆயிரம் தாய்மார்களுக்கு வேலை கிடைத்துள்ளது. பெண்களுக்கு என தனி பல்கலைககழகம் அமைக்க இந்த அரசு முடிவு செய்துள்ளது.

பெண்களுக்கு என பஞ்சாயத்துத்தேர்தல்களில் இட ஒதுக்கீடு செய்ய உத்தரவிட்டது கழக அரசு தான்.

ஆனால் இட ஒதுக்கீட்டை எதிர்த்து நீதிமன்றம் சென்று தடை வாங்கியவர்கள் எதிர்க்கட்சியினர் தான்.

## கருணாநிதி ஆட்சியில் நீதிபட்டபாடு

இன்றைக்கு நீதியைப் பற்றி பேசுபவர்கள் ஆட்சி நடத்திய காலத்தில் நீதி என்ன பாடுபட்டது என்பதை யாரும் மறந்து விடவில்லை.

கருணாநிதிஆட்சி நடத்திய காலத்தில் குமாரபாளையத்தில் காவல் நிலையத்தில் ஜமீலாபீவி என்ற பெண் கொலையுண்டதாக கூறப்பட்டதே, அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது? என்ன நீதி வழங்கப்பட்டது?

மதுராந்தகம் அருகே பெரியகுப்பத்தில் மீனவப் பெண்கள் கொடுமைப் படுத்தப்பட்டார்களே?

பெண்கள் முறைகேடாக நடத்தப்பட்டு, சுடுமணலில் உட்கார வைத்து கொடுமைப் படுத்தப்பட்டதாக கூறினார்களே, அந்த கொடுமைகளை எதிர்த்து காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ரமணிபாய் உண்ணா விரதம் கூட இருந்தார்களே, அவை எல்லாம், நீதியா? அநீதியா?

கருணாநிதி ஆட்சிக் காலத்தில தி.மு.க.சட்டமன்ற உறுப்பினர் ஒருவர் தாய்மார்களை நோக்கி துப்பாக்கியால் சுட்டதாகக் கூறி புகார் தெரிவிக்கப் பட்டதே. அவர்கள் ஆட்சி முடியும் வரையில் அது குறித்து என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

''அப்படி எல்லாம் ஆட்சி நடத்தியவர்கள் தான் இன்றைக்கு திருச்செந்தூர் தேர்தல், நீதிக்கும், அநீதிக்கும் இடையே நடக்கும் தேர்தல் என கூறுகிறார்கள்.

ஆம் தி. மு. க.வினர் தாய்குலத்திற்கு இழைத்த அநீதி கொடுமைகளுக்கும் அதற்கு எதிராக முதல்வர் புரட்சித்தலைவர் தாய்க்குலததிற்கு செய்துள்ள நன்மைகள் என்ற நீதிக்கும் தான் தேர்தல் நடைபெறுகிறது.

இதில் நீதியே வெற்றி பெறும் என்பதில் சந்தேகம் இல்லை.

## தி. மு. க. வேட்பாளரை மடக்கிய மூதாட்டி

தி. மு. க. வேட்பாளர் ஒரு கூட்டத்தில் பேசும் போது சுப்பிரமணியப் பிள்ளையின் மரணத்திற்கு கழகத்தவர் காரணம் என்று கூறினாராம்.

அப்போது அக்கூட்டத்திற்குவந்திருந்த வயதான மூதாட்டி ஒருவர் ''நீ என்னப்பா இப்படி கூறுகிறாய், நீ நேரில் பார்த்தாயா? ஏன் நீ அப்படிகூறுகிறாய்?'' என அந்த மூதாட்டி கேட்டதாக கூறினார்கள்.

நான் அந்த மூதாட்டிக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். உண்மை எது என்பது எல்லோருக்கும் தெரியும்.

தமிழ்நாட்டை எந்த எந்த வகையில் முன்னேற்றலாம் என்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பவர் முதல்வர் புரட்சித் தலைவர். அதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளார்.

வெளிநாடுகளில் இருந்து அரிசி இறக்குமதி செய்ய அனுமதி மறுக்கப்படுகிறது ரிசர்வ் வங்கி அனுமதி தரவில்லை.

தமிழகத்தின் உணர்வுகளை எடுத்துக்காட்டவே முதல்வர்புரட்சித்தலைவர் அடையாள உண்ணா விரதத்தை மேற்கொண்டார். அதையடுத்து மத்திய அரசு முதல்வரை டெல்லிக்கு அழைத்தது.

தமிழக மக்களின் நலன் கருதி இந்த அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

புரட்சித் தலைவர் உங்கள் அனைவருக்கும் நன்மை செய்து இந்த மாநிலம் முன்னேற வேண்டும் என்று பாடுபட்டு வருகிறார். வாக்காளப் பெருமக்களாகிய நீங்கள் அனைவரும் இரட்டை இலைச் சின்னத்தில் முத்திரையிடுங்கள். கழக வேட்பாளர் அமிர்தராஜை வெற்றி பெறச்செய்யுங்கள்.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்.

## ஜெயலலிதா எழுப்பிய முழக்கம்

குலசேகரன் பட்டணம் கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா ''நான் சொல்வது போல சொல்லுங்கள்'' என்று கூறி, ''புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்.'' என்று சொல்லி, தனது கையை உயர்த்தி 2 விரல்களைக் காண்பிக்க கூட்டத்தினர் ''வாழ்க'' என்று கூறி, அதே போல செய்தனர். இதேபோல் 3 முறை கூறினார்.

தமிழ் வாழ்க. அண்ணாவின் நாமம் வாழ்க'' என்று கூறி பேச்சை முடித்தார்.

## டாக்டர் ரெக்ஸ் பிரச்சாரம்

திருச்செந்தூர், பிப்-21. தேர்தல் பணிக்குழு உறுப்பினரும், சென்னை மாநகர முன்னாள் ஷெரீப்புமான டாக்டர் பி. எம். ரெக்ஸ் திருச்செந்தூர் தொகுதி கடற்கரை மீனவகிராமங்களில் கழக வேட்பாளர் அமிர்தராஜுக்காக தீவிரமாகத் தேர்தல் பிரச்சாரம் செய்தார். முக்கிய கடற்கரை கிராமங்களான வீரபாண்டியன் பட்டினம், ஆலந்தலை, அமலிபுரம், மணப்பாடு ஆகிய கிராமங்களுக்கு அவர் சென்று கிராமததலைவர்களையும், பொதுமக்களையும் கண்டு வாக்குகள் கேட்டார்.

கிறித்துவ மீனவ சமுதாயத்து மக்கள், எங்கள் ''மீனவ நண்பன் எம்.ஜி. ஆரைத்தான் ஆதரிப்போம் — இரட்டை இலைக்கே வாக்களிப்போம்'' என்று ஆர்வத்தோடு கூறி கழகத்தை பெருவாரியான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறச் செய்வோம் என்று ரெக்சிடம் உறுதியாகக் கூறினர்.

அதிர்வேட்டு முழங்க - வாண வேடிக்கை ஜொலிக்க

திருச்செந்தூர் தொகுதியில் பல்லாயிரம் பேர் திரண்டு

# செல்வி ஜெயலலிதாவுக்கு உற்சாக வரவேற்பு

தூத்துக்குடி, பிப். 21- கழகக் கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாவுக்கு திருச்செந்தூர் தொகுதியில்உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது

அதிர்வேட்டு முழங்க வாண வேடிக்கை ஜொலிக்க அளிக்கப் பட்டவரவேற்பில்பல்லாயிரக்கணக்கான மக்கள் பங்கேற்றனர்.

திருச்செந்தூர்தொகுதியில் கழக வேட்பாளர் ஆர். அமிர்தராஜை ஆதரித்து தேர்தல்பிரச்சாரம் செய்யகழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா விமானம் மூலம் மதுரை வந்தபோது விமான நிலையத்தில் அவருக்கு மதுரை நகர் மாவட்ட கழக செயலாளர் மதுரை எஸ். பாண்டியன் தலைமையில் கழகத்தவர் ஏராளமாக திரண்டிருந்து வரவேற்பு அளித்தனர்.

பிறகுகார்மூலம்தூத்துக்குடி சென்று அங்கிருந்து தேர்தல் பிரச்சாரத்திற்கு மாலை ஆறரை மணி அளவில் புறப்பட்டார்.

தூத்துக்குடி வந்த செல்வி ஜெயலலிதாவுக்கு நகர் கழக செயலாளர் ஜெபராஜ் தலைமையில் உற்சாகவரவேற்பு அளிக்கப்பட்டது.

தேர்தல் பிரச்சாரத்திற்கு புறப்படும் முன்பு கழக மகளிர் அணியைச் சேர்ந்த ஏராளமானவர்கள் வந்து செல்வி ஜெயலலிதாவுக்கு மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்.

## வழிநெடுக வரவேற்பு

திருச்செந்தூர் தொகுதிக்கு செல்வி ஜெயலலிதா வந்த வழி நெடுக மக்கள் அவருக்கு உற்சாக வரவேற்பு அளித்தனர்.

சாலையின் இருபுறத்திலும் ஏராளமான தாய்மார்கள் கூடியிருந்து எங்கள் ஓட்டு ''இரட்டை இலைக்கே'' எனக் கூறி கோஷமிட்டனர்.

முதலில் திருச்செந்தூர் தொகுதியில் உள்ள உடன்குடி ஒன்றியத்தில் செல்வி ஜெயலலிதா தனது பிரச்சாரத்தை ஆரம்பித்தார். அவரது பேச்சை கேட்க பல்லாயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் திரண்டிருந்தனர்.

செல்வி ஜெயலலிதா உடன்குடிக்கு வருகிறார் எனத் தெரிந்தவுடன், பக்கத்துகிராமங்களில்இருந்து கூட்டம் ஆரம்பம் ஆவதற்கு பல மணி நேரம் முன்னதாக கொளுத்தும் வெயிலில் மக்கள் கூடியிருந்தனர்.

## மக்கள் வரவேற்பு

குலசேகரன் பட்டினம், பரமன் குறிச்சி, மெய்ஞானபுரம் ஆகிய இடங்களிலும் ஏராளமான தாய்மார்களும் பொது மக்களும் திரண்டிருந்து செல்வி ஜெயலலிதாவை வரவேற்றனர்,

செல்வி ஜெயலலிதாவுடன், அமைச்சர் முத்துசாமி மதுரை எஸ். பாண்டியன் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன், எம். எல். ஏ. மொடக்குறிச்சி பாலகிருஷ்ணன் எம் எல் ஏ. ஜான் வின்செண்ட் எம் எல் ஏ. எப் எம் ராஜரத்தினம், வளர்மதி, நெல்லை பாலாஜி, சரோஜா, பாக்கியதாய் கழக வேட்பாளர் அமிர்தராஜ் ஆகியோர் இந்தக் கூட்டங்களில் பங்கேற்றனர்.

செல்வி ஜெயலலிதா பங்கேற்ற கூட்டங்களில் மகளிர் அணியைச்சேர்ந்த மகளிரே தலைமை தாங்கினார்கள்.

செல்வி ஜெயலலிதா மேடைக்கு வந்தவுடன் கூடியிருந்த மக்கள் கரவொலி எழுப்பி வாழ்த்தி வரவேற்றனர்.

அப்போது அதிர்வேட்டுகள் வாண வேடிக்கைகளும் நடந்தன.

செல்வி ஜெயலலிதா இன்று (21-ந் தேதி) திருச்செந்தூர் ஆறுமுகநேரி, காயல்பட்டினம் ஆகிய இடங்களில் நடை பெறும் பிரம்மாண்ட கழகத் தேர்தல் பிரச்சாரப் பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசுகிறார்.

நாளை (22 ந் தேதி) குரும்பூர், ஆத்தூர், பூச்சிக்காடு ஆகிய இடங்களில் செல்வி ஜெயலலிதா தேர்தல் பிரச்சாரம் செய்கிறார்.

## நாகர்கோவில் சம்பவம்: கலெக்டர் ஆலோசனை

நாகர்கோவில், பிப். 21- நாகர்கோவில் பகுதியில் மீண்டும் வன்முறை சம்பவங்கள் நிகழாமல் இருக்கவழிவகைகள் காண மாவட்ட ஆட்சித் தலைவர் பிரானேஷ் ஆலோசனை நடத்தினார்.

நாகர்கோவிலில் உள்ள முக்கிய பிரமுகர்கள் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

சட்டமன்ற உறுப்பினர்கள் என். முத்துகிருஷ்ணன், ஹேமசந்திரன், போலீஸ்சூப்பரின்டெண்ட் எஸ். எ. சவானி ஆகியோரும் இந்த கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

திருச்செந்தூர் தொகுதியில்

# முஸ்லிம் பெண்களை சந்தித்து ஆதரவு திரட்டும் ஜெயலலிதா

தூத்துக்குடி, பிப். 21— திருச்செந்தூர் தொகுதியில் நேற்று முதல் கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா கழக வேட்பாளருக்கு ஆதரவுதிரட்டி வருகிறார் அல்லவா?

நேற்று (20—ந்தேதி) குலசேகரன்பட்டணம், பரமன் குறிச்சி, மெய்ஞானபுரம், உடன்குடி ஆகிய ஊர்களில் நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டங்களில் செல்வி ஜெயலலிதா பேசினார்.

இன்று திருச்செந்தூர், ஆறுமுகனேரி, காயல் பட்டணம் ஆகிய ஊர்களில் செல்வி ஜெயலலிதா பேசுகிறார்.

காயல் பட்டணத்தில் முஸ்லிம்கள் அதிகம் பேர் இருக்கின்றனர். இங்கு முஸ்லிம் பெண்கள் வெளியே அவ்வளவாக வருவதில்லை 'பர்தா' அணிந்திருப்பார்கள்,

இந்த முஸ்லிம் பெண்களைச் சந்தித்து கழகத்துக்கு செல்வி ஜெயலலிதா ஆதரவு திரட்டுகிறார். இன்று மாலை ஒரு வீட்டில் செல்வி ஜெயலலிதா முஸ்லிம் பெண்களைச் சந்திக்கிறார்,



தலைமைக் கழக அறிக்கை எண்: 8/83

## தஞ்சை மாவட்ட - கழகத் தேர்தல்கள்

நடந்து முடிந்த தஞ்சை மாவட்டத்தின் ஒன்றிய — நகர — மாவட்ட செயலாளர் தேர்தல்கள் குறித்து எழுந்தசில ஐயப்பாடுகள் காரணமாக மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் தேர்தல் அறிவிப்புகளை நிறுத்தி வைத்தார்கள்.

அது குறித்து தீர ஆராய்ந்த பிறகு நடந்து முடிந்த நகர ஒன்றிய கழகத்தேர்தல்களை ஏற்றுக்கொள்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

மாவட்ட செயலாளர் தேர்தலில் போட்டியிட்டவர்களின் வாக்குகளை எண்ணிப் பார்க்கு முன் கீழத்தஞ்சைக்கு போட்டியிட்ட திரு. மகாலிங்கம் பி. ஏ. மேலத்தஞ்சைக்குப் போட்டியிட்ட திரு. சாமிநாதன் பி. ஏ. பி. எல். ஆகிய இவர்கள் தவிர மற்றைய வேட்பாளர்கள் போட்டியில் இருந்து விலகிக்கொள்வதாக தலைமைக் கழகத்திற்கு எழுதிக் கொடுத்துள்ள காரணத்தால் மேற்கண்ட இருவரும் செயலாளர்களாக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது.

இந்த அறிவிப்பு கண்ட நாள்முதல் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அந்தந்த பொறுப்புக்கு வருவார்கள்.

மாவட்டத்தின் மற்றைய நிர்வாகிகளை, தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் அந்தந்த மாவட்ட கழக உறுப்பினர்கள் - தேர்ந்தெடுப்பார்கள்.

அதற்கான தேதி விரைவில் அறிவிக்கப்படும்.

ப. உ. சண்முகம்
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை—14
21-2-83

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.
Editor: E. PARASURAMAN

சென்னையில்

## பிரிட்டன் துணைதூதரக அதிகாரி பதவி ஏற்பு

சென்னை, பிப். 21— தென் இந்திய மாநிலங்களுக்கான பிரிட்டன் நாட்டு புதிய துணை ஐ கமிஷனராக தாமஸ் ஸ்டப்ஸ் சென்னையில் தனது பதவிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

தாமஸ் ஸ்டப்ஸ் ஏற்கனவே புதுடெல்லியில் உள்ள பிரிட்டிஷ் தூதரக அலுவலகத்தில் பணியாற்றியவர் ஆவார்.

தேர்தல் பிரச்சாரத்துக்கு

## புரட்சிதலைவர் வருகை

## முக்கிய அறிவிப்பு

திருச்செந்தூர் இடைத்தேர்தல் பிரச்சாரத்துக்கு நம் இதய தெய்வம் புரட்சித்தலைவர் வருகிறார்.

திட்டமிட்டபடி அவர் பயணத்தை துவக்குவார்.

அறிவிக்கப்பட்ட நிகழ்ச்சிகள், ஏற்பாடு செய்யப்பட்ட இடங்களில் மட்டும் அவரது கார் நிற்கும்; அந்த இடங்களில் தரப்படும் வரவேற்புகளை ஏற்றுக்கொள்வார்.

அனுமதிக்கப்பட்ட நிகழ்ச்சிகள் தவிர வேறு நிகழ்ச்சிகளை கழகத் தோழர்களோ பொது மக்களோ ஏற்பாடு செய்யக்கூடாது.

புரட்சித்தலைவருக்கு யாரும் மாலை அணிவிக்கக் கூடாது.

மாலைக்குப்பதிலாக தேர்தல்நிதி தான் அளிக்க வேண்டும்.

அப்படி தேர்தல் நிதி அளிக்க விரும்புவோர் மட்டும் மேடைக்குவர அனுமதிக்கப்படுவார்கள்.

இந்த நடைமுறையை அனைத்துக் கழகத் தோழர்களும் கண்டிப்பாக பின்பற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

செ. அரங்கநாயகம்
கழக தேர்தல் பணிக் குழுத்தலைவர்

## திருச்செந்தூர் சட்டமன்ற தேர்தல்: கழக தேர்தல் பணிக்குழு வேண்டுகோள்

திருச்செந்தூர் சட்டசபை இடைத்தேர்தலில், கழக வேட்பாளர் அமிர்தராஜ் வெற்றி பெறுவதற்கான சூழ்நிலை கனிந்து வருகிறது.

எல்லாவற்றுக்கும் மகுடம் சூட்டும் வகையில் முதல்வர் புரட்சித்தலைவரின் சுற்றுப்பயணம் அமைய உள்ளது.

திருச்செந்தூரில் கழகம் பெறும் மகத்தான வெற்றியில் தங்கள் பங்கும், பணி இருக்க வேண்டும் என ஒவ்வொரு கழகத் தோழர் விரும்புவது இயல்பு.

இது எதிர்பார்த்ததுதான்.

தேர்தல் பணிக்குழுவிடம் எதனையும் எதிர்பாராது, சொந்தப் பொறுப்பில் தேர்தல் பணி செய்ய விரும்பும் கழகத் தோழர்கள் தேர்தல் களத்திற்கு வருவதை வரவேற்கிறோம்.

அவர்கள் திருச்செந்தூரில் உள்ள தலைமை தேர்தல் காரியாலயத்திற்கு வரவேண்டும்.

அவர்கள் எந்தெந்த தொகுதியில் என்ன பணிகளை செய்ய வேண்டும் என தேர்தல் காரியாலயம் கட்டளை இடுகிறதோ அந்தக் கட்டளைகளை ஏற்று வாக்குப்பதிவு முடியும் கடைசி நேரம் வரை பணியாற்ற வேண்டும். வாகன வசதி உள்ள கழகத் தோழர்கள் கடைசி நேர தேர்தல் பணிக்கு தங்கள் சொந்தப் பொறுப்பில் வருவதை வரவேற்கிறோம்.

அப்படி வரவிரும்பும் தோழர்கள் உடனடியாக திருச்செந்தூரில் உள்ள தலைமை தேர்தல் காரியாலயத்திற்கு தகவல் தர வேண்டும்.

தங்களுக்கு ஒதுக்கப்படுகின்ற பகுதியில் வாக்கு பதிவு முடியும்வரை பணியாற்ற வேண்டும்.

23-ந் தேதி முதல் முதல்வர் திருச்செந்தூர் தொகுதியில் சுற்றுப்பயணம் செய்கிறார்.

அவரது காருக்கு பின்னால் அந்தந்தப்பகுதிகளில் பணி செய்யும் கார்கள் மட்டுமே வரவேண்டும்.

வெளியூர் தோழர்களின் கார்களோ தொகுதியில் வேறு பகுதிகளில் பணியாற்றும் கழக பொறுப்பாளர்களின் கார்களோ கண்டிப்பாக வரக்கூடாது.

இது புரட்சித்தலைவரின் அன்புக் கட்டளை இக்கட்டளையை மீறி புரட்சித்தலைவர் அவர்களின் காருக்குப் பின்னால், வர முயற்சிக்கும் தோழர்கள் தேர்தல் பணிக்கு இடையூறு செய்பவர்களாகவே கருதப்படுவர்.

செ. அரங்கநாயகம்
தலைவர்: கழக தேர்தல் பணிக்குழு
திருச்செந்தூர்

## "எம். ஜி. ஆருக்கே ஓட்டு போடுவோம்" தாய்மார்கள் உறுதி

அமைச்சர் அண்டே கூட்டத்தில் எழுச்சி

திருச்செந்தூர், பிப். 21-'எம்.ஜி.ஆருக்குத் தான் ஓட்டுப் போடுவோம்' என்று அமைச்சர் டாக்டர் அண்டே பேசிய கூட்டத்தில் தாய்மார்கள் முழக்கமிட்டனர்.

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் அண்டே திருச்செந்தூர் தொகுதியில் கிராமம் கிராமமாகச் சென்று தேர்தல பிரச்சாரம் செய்து வருகிறார்.

பரமன்குறிச்சி, ஆத்தூர், திருச்செந்தூர் போன்ற இடங்களில் கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து அமைச்சர் அண்டே பேசினார்.

அப்போது "எம். ஜி. ஆருக்கே எங்கள் ஓட்டு" என்று தாய்மார்கள் முழக்கமிட்டனர்.

உடன்குடி ஒன்றியத்தில் பல கிராமங்களுக்குச் சென்று வாக்காளர்களை சந்தித்தார்.

"சத்துணவு திட்டம் கொண்டு வந்த எம்.ஜி. ஆருக்கே எங்கள் ஓட்டு" என்று தாய்மார்கள் கூறினார்கள்.

மத்திய அரசுடன் வாதாடி பல உரிமைகளைப் பெற வேண்டியுள்ளது. இந்த சூழ்நிலையில் வாக்காளர்கள் கழகத்திற்கே ஏகோபித்த ஆதரவு அளிக்க வேண்டும் என்று அமைச்சர் கேட்டுக் கொண்டார்.

### அமோக வெற்றி கிடைக்கும்

திருச்செந்தூரில் நிருபர்கள் சந்தித்தபோது அமைச்சர் அண்டே கூறியதாவது:

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்திற்கு திருச்செந்தூர் வாக்காளப் பெருமக்கள் பெருவாரியாக வாக்களித்து புரட்சித் தலைவரின் கரத்தை வலுப்படுத்தும் வகையில் கழக வேட்பாளர் ஆர். அமிர்தராஜை வெற்றி பெறச் செய்ய வேண்டுகிறேன்.

திருச்செந்தூர் தொகுதியைச் சுற்றுப் பிரச்சாரம் செய்ததில், தி மு கழகம் வெற்றி வாய்ப்பை இழக்கும் என கருத்து நிலவுகிறது. அதன் தொண்டர்கள் வேறு கட்சிக்கு உதவி செய்யலாமா என்று எண்ணுகின்றனர்.

உடன்குடி ஒன்றியத்தில் பலபகுதிகளில் வாக்காளர்களை நேரில் சந்தித்தேன். இதிலிருந்து பெரியகுளம் தேர்தலைப் போல திருச்செந்தூரில் அதிக வாக்குகள வித்தியாசத்தில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்திற்கு அமோக வெற்றி



கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினார்.

தோட்டக்கலை

கண்காட்சி,

### துணை சபாநாயகர் திறந்தார்

சென்னை பிப். 21— சென்னையில் நடைபெறும் அகில இந்திய வர்த்தக சுற்றுலா பொருட் காட்சியில் தோட்டக்கலை கண்காட்சி துவக்க விழா நடைபெற்றது.

சட்டப்பேரவை துணை தலைவர் பி. எச். பாண்டியன் கண்காட்சியைத் திறந்து வைத்தார். கண்காட்சியில் இடம் பெற்று பரிசு பெற்றவர்களுக்கு பரிசு வதங்கும் விழா நடைபெற்றது.

கழகத்தில் இணைந்தனர்:

### இளைஞர் காங்கிரஸ் கலைப்பு

கடலூர், பிப். 21— தென்னாற்காடு மாவட்டம் கோட்டகுப்பம் நகர இளைஞர் காங்கிரஸ் கலைக்கப்பட்டு அதன் நிர்வாகிகள் அனைவரும் ஹீராசந்த் எம். பி. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

இளைஞர் காங்கிரஸ் தலைவர் நைனாமுகமது துணைத்தலைவர் ஆர். எம். ஜக்கரியா, செயலாளர் கே. எம். ஜக்கரியா துணைச்செயலாளர் அனீபா, பொருளாளர் யூசுப் ஆகியோரும் மற்ற செயற்குழு உறுப்பினர்களும் கழகத்தில் இணைந்தனர்.

### மறைவு

வால்பாறை பத்திரிகை ஏஜண்டு தங்கம்மாள் கோவிந்தனின் மகள் சகுந்தலா காலமானார்.

## புதுவையில் அரிசி விலை உயர்வு: மக்கள் அவதி

பாண்டிச்சேரி, பிப். 21- பாண்டிச்சேரி மாநிலத்தில் அரிசி விலை உயர்ந்துள்ளதால் புதுவை மக்கள் பெரும் பாதிப்புக்குள்ளாகியிருக்கிறார்கள்.

பாண்டிச்சேரி மாநிலத்தில் பகிரங்க மார்க்கெட்டுகளில் அரிசி விலை மேலும் உயர்ந்து கொண்டே போகிறது.

கூட்டுறவு பண்டக சாலைகளில் விற்கப்படும் விலையைவிட பகிரங்க மார்க்கெட்டுகளில் மிகவும் அதிக விலையில் அரிசி விற்கப்படுவதால் பொதுமக்கள் அவதிக்குள்ளாகியிருக்கிறார்கள். கூட்டுறவு கடைகளில் கிலோ ரூ. 3.60-க்கு விற்கப்படுகிறது. ஆனால் அது சரிவர வினியோகம் செய்யப்படுவதில்லை.

அதேநேரத்தில்பகிரங்க மார்க்கெட்டுகளில் கிலோ ரூ. 4.60 என்றும் அதற்கு மேலும் விற்கப்படுகிறது. பாண்டிச்சேரி மாநிலத்தில் உள்ள ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களில் எந்தவிதமான வியாபாரமும் நடக்காமல் ஸ்தம்பித்த நிலையில் இருப்பதாகவும் கூறப்படுகிறது. குவிண்டால் ஒன்றுக்கு 150 ரூபாய் என்று விலை நிர்ணயம் செய்யப்பட்டிருப்பது விவசாயிகளுக்கு லாபகரமாக இல்லை என்றும் அதனால் பெரும் விவசாயிகள் தங்களது நெல்லை விற்பனைக்குக் கொண்டுவர பயப்படுகிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

தட்டாஞ்சாவடியில் உள்ள ஒழுங்குமுறை விற்பனைக்கூடத்தில் ஒரு வேலையும் நடைபெறவில்லை,

அரிசி விலை ஏற்றத்தால் பாண்டிச்சேரியில் மக்கள் பெரும் அவதிக்குள்ளாகி வருகிறார்கள்.

## நாடாளுமன்றத்தில் அசாம் பிரச்சினை விவாதம்

புதுடெல்லி, பிப். 21— நாடாளுமன்றத்தில் இன்று அசாம் நிலவரம் குறித்த விவாதம் நடைபெற்றது.

நாடாளுமன்றத்தில் உள்ள மற்ற பிரச்சினைகள் எல்லாவற்றையும் ஒத்திவைத்து அசாம் பிரச்சினை பற்றி விவாதிக்க முடிவு எடுக்கப்பட்டது.

சபாநாயகர் பலராம் ஜாக்கர் இதை அறிவித்தார்.

உள்துறை மந்திரி பி. சி. சேத்தி அசாம் நிலவரம் குறித்து ஒரு அறிக்கை தாக்கல் செய்தார் அதன்பிறகு விவாதம் தொடர்ந்தது.

மாநிலங்களவையிலும் இதுபோல விவாதம் நடைபெறும் நாளை இதற்கு சேத்தி பதில் அளிப்பார்.

முறைகேடாக சலுகைகள் வழங்கி

## புதுவையில் தி. மு. க. தேர்தல் நிதி வசூல் வேட்டை

பி. கே. லோகநாதன் குற்றச்சாட்டு

பாண்டிச்சேரி- பிப். 21-பாண்டிச்சேரியில் முறைகேடாக சலுகைகள் வழங்கி தி. மு. க. வினர் வசூல் வேட்டையில் இறங்கியுள்ளனர் என்று புதுவை மாநில கழக செயலாளா பி. கே. லோகநாதன் குற்றம் சாட்டினார்.

பாண்டிச்சேரி மாநிலம் ஏம்பலம் என்ற இடத்தில் மாபெரும் கழகப்பொதுக் கூட்டம் நடந்தது

இக்கூட்டத்தில்புதுவை மாநில கழக செயலாளர் பி.கே.லோகநாதன் பேசுகையில் கூறியதாவது:—

பாண்டிச்சேரியில் பஸ் கட்டணம் உயர்த்தப்பட்டுள்ளது. குறைந்த கட்டணம் 50 காசிலிருந்து 75 காசாக உயர்த்தி உள்ளனர்.



### ஏழைகள் பாதிப்பு

கிலோ மீட்டருக்கு ஆறேகால் காசு கட்டணம் இப்போது ஏழரை காசாக உயர்த்தப்பட்டுள்ளது.

எவரையும் கலந்தாலோசிக்காமல் செய்த இந்த முடிவினால் ஏழைகள் பாதிக்கப்பட்டுள்ளனர். பெரியகுளம் தேர்தலுக்கு பஸ் அதிபர்களிடம் நிதி வசூலித்தனர். இப்போது திருச்செந்தூர் தேர்தலுக்கு பஸ் அதிபர்களிடம் தி. மு. க.வினர் நிதி வசூலிக்கிறார்கள். அதன் பிரதிபலிப்பே இந்த பஸ் கட்டண உயர்வு.

சீமைச் சாராய மொத்த வியாபாரிகளிடமும் தி.மு.க.வினர் வசூல் நடத்துகிறார்கள். அந்த வியாபாரிகள் வரிகட்டாமல் வரி ஏய்ப்பு செய்யும் நிலை ஏற்பட்டுள்ளது.

இவ்வாறு பி. கே. லோகநாதன் கூறினார்.

மற்றும்கோடம்பாக்கம் குமார, என், வி. என். செல்வம், எம். ஏ. சண்முகம், ராதாகிருஷ்ணன், உமாபதி, நந்தன ஆகியோரும் பேசினா.

### இந்தியா-சோவியத் கருத்தரங்கு

பெங்களூர், பிப். 21— இந்தியாவும் - சோவியத் ரஷ்யாவும் இணைந்து நடத்தும் விண்வெளி ஆராய்ச்சி பற்றிய கருத்தரங்கு பெங்களூரில் நடைபெறவிருக்கிறது.

ஐந்து நாள் நடைபெறும் இந்த கருத்தரங்கு இன்று பெங்களூரில் தொடங்கியது.

### கழகத்தோழர் திருமணம்

சென்னை, பிப். 21— அண்ணா நகர் 70 வது வட்டம் நினைத்ததை முடிப்பவன் எம். ஜி. ஆர். மன்ற துணைச் செயலாளர் மு. வீரமணிக்கும், செல்வி. ராணிக்கும் கடந்த 18ந் தேதி அருணகிரிநாதர் பக்த சபையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

கழகத் தோழர்கள் வ. சீனிவாசன், கு. ஏழுமலை, மு. ஜெயராமன், சாரதி, கபாலி, தேவன் ஆகியோரும் மற்றும் பலரும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

## தஞ்சையில் புளி மிளகாய் விலை குறைந்தது

கும்பகோணம், பிப். 21. தஞ்சை மாவட்டத்தில் புளி, தனியா, மற்றும் மிளகாய் விலை வெகுவாக குறைந்துள்ளது.

தஞ்சை மாவட்டத்தில் அத்தியாவசியப் பண்டங்களான புளி, தனியா (கொத்தமல்லி) மற்றும் மிளகாய் ஆகியவற்றின் விலை வெகுவாக குறைந்துள்ளது.

50 கிலோ கொண்ட புளிக்கட்டு ஒன்றின் விலை 550 ரூபாயாக இருந்தது. தற்போது 350 ரூபாயாக குறைந்துள்ளது.

40 கிலோ கொண்ட தனியா மூட்டையின் விலை, 200 ரூபாயிலிருந்து 160 ரூபாயாக குறைந்துவிட்டது,

இதே போல் மிளகாய் விலை, 10 கிலோவுக்கு 90 ரூபாய் என விற்றது தற்போது 65 ரூபாய்க்கு குறைந்துவிட்டது.

காய்கறிகளின் விலையும் இறங்குமுகமாக உள்ளது.

தக்காளி, கோஸ், வெங்காயம் போன்றவைகளின் விலையில் பெரும் வீழ்ச்சி ஏற்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது ஆகும்.

அண்ணாவில் விளம்பரம் செய்து பயன பெறுங்கள்

## ரூ. 1 லட்சம் செலவில் ஆதிதிராவிடர்களுக்கு தொழில் பயிற்சி

சென்னையில் துவக்கம்

சென்னை, பிப். 21- ரூபாய் 1 லட்சம செலவில் ஆதிதிராவிட மக்களுக்கு தொழிற் பயிற்சி அளிக்கும் திட்டம் சென்னை நகரில் துவக்கி வைக்கப்பட்டது.

ஆதிதிராவிடர் மற்றும் மலைஜாதியினர் ஆகியோருக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் திட்டங்களை தமிழக அரசு சீரிய முறையில் செயல்படுத்தி வருகிறது.

ஆதி திராவிட மக்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கும் நல்ல திட்டம் ஒன்று சென்னையில் துவககப்பட்டது.

தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டுவசதி மற்றும் அபிவிருத்திக் கழகம் ரூ. 1 லட்சம் செலவிலான திட்டம் ஒன்றை இன்று தொடங்கியது.

சென்னை பெசன்ட் சாலை, ஐஸ் அவுஸ் பகுதி அருகே இந்தச் சீரிய திட்டம் துவக்கப்பட்டது இதன் மூலம் ஆதிதிராவிட மக்களுக்கு தொழிற் பயிற்சி அளிக்கப்படும். சுயவேலை வாய்ப்பு அளிக்கும் திட்டமும் இதில் அடங்கும்.

இந்தத் திட்டத்தின் மூலம் 30 ஆதி திராவிடர்கள் பயன் பெறுவார்கள்.

### நோபல் பரிசு: ரூ. 1 லட்சத்துக்கு விலை போனது

லண்டன், பிப். 21— 1933ஆம் ஆண்டு கொடுக்கப்பட்ட நோபல் பரிசு ஒன்று இப்போது ஒரு லட்சத்து 20 ஆயிரம் ரூபாய்க்கு விற்கப்பட்டுள்ளது.

நோபல்பரிசான தங்கப் பதக்கம் ஒன்று கடந்த 1933ம் ஆண்டில் நார்மன் ஏஞ்சல் என்பவருக்குதரப்பட்டது. அந்த தங்கப் பதக்கத்தை நார்மன் ஏஞ்சலின் உறவினர் இப்போது விற்றுவிட்டார் அதை 8 ஆயிரம் பவுனுக்கு விலை கொடுதது வாங்கியவர் எரிக்லேன் என்பவர்.

திருச்செந்தூரில்

கழகத்துக்கு ஆதரவு:

### சலவையாளர் சங்கத்தலைவர் அறிக்கை

கடலூர், பிப். 21— தமிழக அண்ணா சலவைத் தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் மா. முனியன் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

தமிழகத்தில் முதன் முதலாக சலவைத் தொழிலாளர்களுக்கு வீட்டு மனை வழங்கும் திட்டம் கொண்டு வந்து நிறைவேற்றி, ஏழைக்குழந்தைகளுக்கு சத்துணவுத் திட்டம் போன்ற பல நல்ல திட்டங்களைக் கொண்டு வந்த ஏழைபங்காளன் தமிழகமுதல்வா புரட்சித் தலைவர் தான். அவரது பணி மேலும் தொடர குழப்பவாதிகளின் வாய்ப்பந்தல் கண்டு ஏமாந்துவிடாது, சலவைத் தொழிலாளர் போன்ற நலிந்தோர் வாழ்வு வளம் பெற திருச்செந்தூர் தொகுதியில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து இரட்டை இலைச் சின்னத்தில் வாக்களித்து வெற்றி பெறச் செய்யுமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

சங்கம் சம்பந்தமாக என்னுடன் கடிதத் தொடர்பு கொள்ள விரும்புவோர் மா. முனியன், 161, கடலூர் ரோடு, விருத்தாசலம் என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## திருச்செந்தூரும் பெரியகுளம்தான் - எனும் தேர்தல் முடிவுக்கு உழைத்திட புறப்படு!

# மேனகா கட்சியில் முன்னாள் அமைச்சர்

புதுடெல்லி, பிப். 21— மத்திய அரசின் முன்னாள் உதவி அமைச்சர் மகன்பாய் பரோட் மேனகா கட்சியில் சேர்ந்தார்.

மகன்பாய் பரோட் குஜராத்தைச் சேர்ந்தவர். சஞ்சய் காந்தியின் லட்சியங்களை மேனகா காந்தியினால்தான் நிறைவேற்ற இயலும் என்று அவர் அறிவித்துள்ளார்.

ரூ. 7.5 லட்சம் மதிப்புள்ள

# ஆறு ரேஸ் குதிரைகள் விபத்தில் இறந்தன

பெங்களூர், பிப். 21— பம்பாயில் இருந்து வந்த 6 ரேஸ் குதிரைகள் ஒரு விபத்தில் சிக்கி இறந்து விட்டன.

இவைகளின் மதிப்பு ரூ. 7.5 லட்சம் ஆகும்.

இந்த விபத்து பெங்களூரில்இருந்து 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள தெகூர் கிராமத்தில் நடந்தது.

பம்பாயில் இருந்து இவைகள் ஒரு வேன் மூலம் கொண்டு வரப்பட்டன. அந்த வேன் மரத்தில் மோதியதில் குதிரைகள் இறந்தன. வேன் டிரைவர் பலத்த அடிபட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

அரிசி பெறும் முயற்சிக்கு இடையூறு

# கவர்னருக்கு கடிதம்: மனோகரனின் மக்கள் விரோதப் போக்கு

## அமைச்சர் திருநாவுக்கரசு கண்டனம்

**சென்னை, பிப். 21- தமிழகப்பிரச்சினை குறித்து பிரதமருடன் பேச முதல்வருடன் சென்ற கவர்னரைக் கண்டித்து மனோகரன் கடிதம் எழுதியிருப்பது தமிழக மக்களுக்கு விரோதமான செயல் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கண்டித்திருக்கிறார்.**

இதுபற்றி அமைச்சர் திருநாவுக்கரசு வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

திமுகவின்தற்போதைய புது நியமன துணைப் பொதுச் செயலாளரும், முன்னாள் தமிழக நிதி அமைச்சருமான மனோகரன் மாநில ஆளுநர் குரானாவுக்கு எழுதிய கடிதத்தின் நகல் எல்லாப் பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டுள்ளது. அக்கடிதத்தின் மூலம் ஆளுநர் குரானாவைக்குறைகூறிக் கண்டித்துள்ளார் மனோகரன்.

மனோகரனின் தமிழக மக்களுக்கு விரோதமான கேடு விளைவிக்கிற இந்த போக்கை வன்மையாக ஆட்சேபிக்கவும், கண்டிக்கவும் வேண்டியது அவசியமாகிறது. தமிழகம் இயற்கையின்சதியால் மழையின்றி வாடுகிறது.

தஞ்சை இன்று வறண்டு கிடக்கிறது. அரிசி, மின்சாரம், குடிதண்ணீர் போன்ற அத்யாவசியமான தேவைகளை மக்கள் பெற்றிட புரட்சித் தலைவரின் அரசு அனைத்து முயற்சிகளையும் கடுமையான போர்க்கால நடவடிக்கை போல் மேற்கொண்டுள்ளது.



### வரலாற்று கட்டாயம்

மத்திய அரசின் சம்பந்தப்பட்ட வேளாண்மைத்துறை அமைச்சரின் மெத்தனப் போக்கைக் கண்டித்த முதல்வர் புரட்சித் தலைவரே உண்ணாவிரத அறப் போராட்டம் இருக்க வேண்டிய வரலாற்று அவசியம் ஏற்பட்டது.

இந்த அறப்போராட்ட வெற்றியின் முதல் பலனாக பிரதமர் அவர்களோடும்மற்ற அமைச்சர்களோடும் தமிழகத்தின் துயர் நீக்க முயற்சிக்கும் நிலைக்கான பேச்சு வார்த்தை ஏற்பட்டது.

நம் மாநிலத்தில் ஆளுநர் மக்களின் துயர் போக்க, நிலைமைகளை மைய அரசுக்கு எடுத்துச் சொல்ல மனிதாபிமான அடிப்படையில்பிரதமரை சந்தித்தார். முதல்வரையும், ஆளுநரையும இணைத்து நேரில் வைத்துக் கொண்டு உண்மை நிலையை, வறட்சிக் கொடுமையை அரிசித் தேவையை, மின்சார நிலைமையை பிரதமர் கேட்டறிந்தார். பிரதமரின் உரிய நடவடிக்கைக்கும், உதவிக்கும் தமிழகம் காத்திருக்கிறது,

### கண்டிக்கத் தக்கது

மாநில ஆளுநரின் ஒத்துழைப்புக்கு மனிதாபிமானசெயலுக்குஅவரைப் பாராட்டுவதற்கும நன்றி கூறுவதற்கும் பதிலாக கண்டனம் தெரிவிப்பது, கண்டிக்கத்தக்கது. வருந்தத்தக்கது, பொறுப்பும் விவேகமும் அற்றது. மனோகரனின் இந்த மனநிலை தமிழக மக்களை அதிர்ச்சிடையச் செய்திருக்கிறது,

தன்னை முழுமேதை என்று வர்ணித்துக் கொள்ளும் மனோகரன், அரசியல் சட்டத்தின் எந்தஷரத்து ஒரு மாநில ஆளுநர் பிரதமரை தனித்தோ அல்லது முதல்வரோடு சந்திக்கக் கூடாது என்று தடுக்கிறது என்று விளக்குவாரா? அரசியல் சட்டத்தில் அப்படி எந்தச் ஷரத்தும் இல்லை. இப்படிப்பட்ட முன் உதாரணம் ஏதேனும் உண்டா என்கிறார் மனோகரன்.

ஆளுநர்- அவருக்கோ, முதல்வருக்கோ அரிசி கேட்டுச் செல்லவில்லை. தமிழக மக்களைக் காக்கும் நடவடிக்கையில் அவசரம் கருதி, அவசியம் கருதி நம் ஆளுநர் மேற்கொண்ட அந்த உரிய முறையிலான நடவடிக்கை அவசியம் கருதி ஏற்படும் காலக் கட்டங்களில்மற்ற மாநில ஆளுநர்களும்கூட பின்பற்றத் தேவையான ஒன்றாகும்.

எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதிகூட, ஆளுநர், முதல்வர் கூடப் போனதற்கு "வேறு ஒரு கதை இருக்கிறது"— அதைப் பிறகு எழுதுகிறேன் என்று தன் கடிதத்தில் எழுதி — ஒரு கதை தயாரித்துக் கொண்டுள்ளார். இதையும் இணைத்துப் பார்க்காமல் இருக்க இயலவில்லை.

### அரசியல் லாபம் தேடும் தி. மு. க.

ஆகமொட்டு மொத்தமாக தமிழக மக்களுக்கு அரிசியோ, தண்ணீரோ கிடைக்க ஏற்படும்முயற்சிகளுக்குத் துணை நிற்காத ஒரு துணைப் பொதுச் செயலாளர், தலைவர் இவர்களைக் கொண்டு தி. மு. க. தமிழக மக்களுக்கு எதிராகவிரோதமாக செயல்படுகிறது பஞ்சம் போனால் தி.மு.கவிற்கு போராட்டப் பொருளுக்குப் பஞ்சம் போலும், வறட்சியும், வறுமையும் நீங்கினால் தி. மு. க. குழப்பம் ஏற்படுத்த கொள்கை வறட்சி ஏற்பட்டுவிடும் என்பது தெரிகிறது. இதனால் அரசியல் லாபம் தேடவும் கேவலம்விளம்பர ஆசைக்கும் ஆளாகி இப்படிப்பட்ட கடிதங்களை எழுதிக் கொண்டிருப்பது அருவருப்பானது. கண்டனத்திற்குரியது.

ஏற்கனவே உண்ட வீட்டிற்குத் துரோகம் செய்த உங்கள் உயர்ந்த பண்பால் மயிலாப்பூர் மக்களால் பாடம் புகட்டப்பட்ட நிலையில் இருக்கிறீர்கள்.

இந்த நிலையில் தமிழக மக்களின் வயிற்றுப் பிரச்சினையில் வாய் நீளம் காட்டி தமிழக மக்களின் முழுமையான கோபத்திற்கும், சாபத்திற்கும் ஆளாகாதீர்கள் எனக் கேட்டுக் கொண்டு ஆளுநரைக் கண்டித்த மனோகரன் செயலை வன்மையாக கண்டிக்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

ஆயிரக்கணக்கானவர் கொலை:

# அசாம் மாநிலத்தில் ஓயாத கலவரம்: பிரதமர் விசாரணை

## பெண்கள் - குழந்தைகள் கதறல்

**கவுகாத்தி, பிப். 21- அசாம் மாநிலத்தில் வன்முறை பெரும் அளவில் தொடர்ந்துள்ளது. எங்கும் பிணக்குவியலாக காட்சி தருகிறது. சாவு எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டியிருக்கிறது. பிரதமர் நேரில் சென்று நிலைமையை கண்டறிந்தார்.**

நிலவரத்தை நேரில் காண பிரதமர் இந்திரா காந்தி இன்று விரைந்துள்ளார்.

அசாம் மாநிலத்தில் தேர்தல் நடத்துவதை ஆட்சேபித்து நடந்து வரும் போராட்டம் வன்முறையாக மாறி தொடர்ந்து வலுவடைந்து வருகிறது.

இதுவரை பல்வேறு பகுதிகளிலும் ஏற்பட்ட வன்முறைச்சம்பவங்களில் இறந்தவர்களது எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டிவிட்டதாகச் சொல்லப்படுகிறது.

### பிரதமர் விரைந்தார்

அசாம் நிலவரத்தை நேரில் காண பிரதமர் இந்திரா காந்தி இன்று காலை கவுகாத்திக்கு விரைந்தார். மத்திய உள்துறை அமைச்சர் பி. சி. சேத்தி அசாம் சென்று பார்வையிட்டு வந்தார். அசாம் நிலவரம் குறித்து அவர் பிரதமரிடம் விளக்கினார்.

கலவரம் தொடர்ந்து நடந்து வருவதால் பல்லாயிரக்கணக்கானவர்கள்வீடு இழந்து தவிக்கின்றனர்.

கடந்த 24 மணி நேரத்தில் மட்டும் வன்முறைச் சம்பவங்களில் 38 பேர் மாண்டுள்ளனர்,

வயல்களில் இருந்தும், குடிசைகளில் இருந்தும் ஞாயிறு அன்று 50சடலங்கள் கண்டெடுக்கப்பட்டன,

பவானியூர்என்ற இடத்தில் வாக்குச்சாவடியை ஒரு கும்பல் கைப்பற்ற முயன்றது.

அங்கு நடந்த துப்பாக்கிச் சூட்டில் மூவர் இறந்தனர்.

தேர்தல் பணிக்காக வந்தமத்திய அரசுஊழியர்கள் மூவர் விஷமிகளால் தாக்கப்பட்டனர்.

சபுவா என்ற இடத்தில் மத்திய ரிசர்வ் போலீஸ் ஹவில்தார் ஒருவர் விஷமிகளால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

நாமரூப் அருகில் சில வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன.

### ராணுவத்திற்கு...

அதே பகுதியில் ஒரு பெண்ணும் இரு குழந்தைகளும் கொல்லப்பட்டனர்

வீடுகள் தீக்கிரையாகியதால் சுமார் 5 ஆயிரம் பேர் கோரேஸ்வார் ரயில்வே ஸ்டேஷனில் தங்கியுள்ளனர்.

மங்கள்தேசாய்பகுதியில் நடந்தவன்முறைசம்பவங்களில் கொல்லப்பட்ட 60 பேர்களில் 19 சடலங்கள் நேற்று ஒட்டுமொத்தமாக எரியூட்டப்பட்டது.

நவ்காங் பகுதியில் பெரும் அளவில் கலவரம் நடந்ததைத் தொடர்ந்து அங்கு ராணுவம அழைக்கப்பட்டுள்ளது.





மராட்டியத்தில்

# பேப்பர் பஞ்சம்: சிலேட் பயன்படுத்த உத்தரவு

பம்பாய், பிப். 20— மகாராஷ்டிர மாநிலத்தில் எழுதும் பேப்பருக்கு பஞ்சம ஏற்பட்டு இருக்கிறது. பேப்பர் விலையும் ஏறி இருக்கிறது.

இதனால் பள்ளிகளில் பிள்ளைகள் சிலேட்டுப் பலகைகளைப் பயன்படுத்த அரசு உத்திரவிட்டுள்ளது.

இப்படிப்பட்ட எழுதும் பேப்பர் பஞ்சத்தை சமாளிக்க உத்திரவுகளை மராட்டிய அரசு பிறப்பித்துள்ளது.

எல்லா ஆரம்ப (பிரைமரி) பள்ளிப்பிள்ளைகளும் சிலேட்டுப் பலகையில் எழுதலாம்.

5ம் வகுப்பில் இருந்து 8-ம் வகுப்பு வரை உள்ள பிள்ளைகள் 40 பக்கம் முதல் 80 பக்கம் உள்ள நோட்டுக்களைத்தான் உபயோகப்படுத்தவேண்டும்,

8-ம் வகுப்பு முதல் 10-ம் வகுப்பு வரை உள்ள மாணவர்கள் 80 பக்க நோட்டுகளைப் பயன்படுத்தலாம். ஆனாலும் ஆங்கிலத்திற்கும், கணக்கிற்கும் 200 பக்க நோட்டுக்களை பயன் படுத்தலாம்.

அரசின் இந்த உத்திரவுகளுக்கு எதிராக எந்தப் பள்ளியாவது செயல்பட்டால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்று அரசு எச்சரித்துள்ளது.

மாணவர்களது தேவையற்ற செயலைக் குறைக்கவும் சுமையைக் குறைக்கவும் இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டு இருக்கிறதாம்.





# தமிழ்காக்கும் தலைவனுக்கே செந்தூரில் ஓட்டு
# தமிழ் விரோத சக்திகளுக்கு வைத்திடுவீர் வேட்டு!